25th September 1961]

*Ports—Portonovo—Repairs to*

DEPUTY SPEAKER : Questions 1807 and 1820-D may be taken up together.

* 1807 Q.—SRI N. MARUDACHALAM (On behalf of SRI V. K. KOTHANDARAMAN) : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தென்னாற்காடு பறங்கிப்பேட்டையிலுள்ள சிறிய துறைமுகத்தை பழுதுபார்க்க உத்தேசமுண்டா ?

(இ) அதன்மூலம் 1958 முதல் 1960 வரை வருட வருமானம் எவ்வளவு ? செலவு எவ்வளவு ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No, Sir.

(*b*)

| *Year.* | | *Receipts.* | | *Charges.* |
|---|---|---|---|---|
| | | RS. | | RS. |
| 1957–58 | .. | 217 | .. | 2025 |
| 1958–59 | .. | 418 | .. | 1989 |
| 1959–60 | .. | 422 | .. | 2069 |
| 1960–61 | .. | 510 | .. | 2827 |

*Ports (Portonovo)*

* 1820-*D Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Works be pleased to state whether there is any proposal to develop Porto Novo port during the third Plan period?

THE HON. SRI P. KAKKAN : No, Sir.

SRI A. A. RASHEED : In view of the importance of this port to the people in and around Porto Novo, will the Government at least consider to repair this port, if they cannot improve the same?

THE HON. SRI P. KAKKAN : ஏற்கெனவே இந்தப் போர்ட்டானது நல்ல நிலைமையில் இருந்தது. இப்போது இதில் வியாபார முக்கியத்துவம் குறைந்திருக்கிறது. அதோடு பக்கத்தில் கடலூர் போர்ட் உயர்ந்த நிலைமையில் இருக்கிறது. ஆகவே இதைப்பற்றி பின்னால் அரசாங்கம் பரிசீலனை செய்யும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI A. GOVINDASAMY : ராமனாதபுரம் ராஜா அவர்கள் பி.டப்ளியூ.டி. மினிஸ்டராக இருந்த காலத்தில் இந்த போர்டை உயர்த்து வதற்காக ஒரு திட்டம் தீட்டினார்கள். அந்தத் திட்டம் என்னவாயிற்று ? அதோடு நெய்வேலித் திட்டத்தை ஒட்டி பரங்கிப்பேட்டை துறைமுகத்தையும் சீர்படுத்துவதற்கு அரசாங்கம் ஆலோசனை செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அமைச்சர் அவர்கள் முன்னால் சொன்ன திட்டத்தின் விவரங்கள் இப்போது என்னிடமில்லை. தனியாக இதற்கு கேள்வி போட்டால் பதில் சொல்லலாம்.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, சிறு துறைமுகங்களை பெரிதாக்க வேண்டுமென்று ஆலோசனை நடந்துகொண்டிருக்கும் இந்த நேரத்தில் பரங்கிப்பேட்டை துறைமுகத்தை பெரிதாக்க முடியுமா என்பதைப் பற்றி ஆராய ஒரு குழுவை நியமிக்க முடியுமா? அல்லது இதைப்பற்றி ஆராய்ந்து ஒரு முடிவு எடுக்க மத்திய அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI P. KAKKAN : நான் வாசித்த பதிலில் சொல்லப் பட்டிருக்கிறது. 1957–58-ல் இதில் ஏற்பட்ட செலவு ரூ. 2,025, வருமானம் வந்தது ரூ. 217. 1960–61-ல் செலவு ரூ. 2,827, வருமானம் ரூ. 510. ஆகவேதான் இதைப்பற்றி பின்னால் பரிசீலனை செய்யலாம் என்று அரசாங்கம் எண்ணியிருக்கிறது. அதோடு 10-வது மைலில் கடலூர் துறை முகம் வேறு இருக்கிறது.

*Fertilizers—Complaints regarding distribution of—(North Arcot district)*

* 1808 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் மின்சார அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு மாவட்டம் போளூர் கூட்டுறவு சங்கத்தில் உர விநியோகம் செய்வது குறித்து 12—10—1960, 5—11—1960-ல் புகார்கள் வந்துள்ளனவா?

(இ) அப்படியானால், அவைகளின்மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன?

THE HON. SRI V. RAMAIAH : (அ) & (இ) A petition dated 12th October 1960 containing allegations in regard to the supply of ammonium sulphate by the Polur Co-operative Marketing Society was received by the Deputy Registrar and the District Agricultural Officer concerned. The allegations were enquired into and it was found that the petitioner was supplied with only a part of his requirement of ammonium sulphate on 12th October 1960 on account of inadequacy of stock in the society. The petitioner was subsequently supplied with the balance of ammonium sulphate required by him. The petition, dated 5th November 1960 was not received either by the Revenue or Co-operative or Agricultural department officers.

SRI S. M. ANNAMALAI : சில மூட்டைகளை போலீஸ் பிடித்து வைத்திருந்தது உண்மையா? அப்படியானால் அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது. அந்த மூட்டைகள் எல்லாம் ஒரே விவசாயிக்குத் தரப்பட்டது என்று சொல்லப்படுவது உண்மையா?

THE HON. SRI V. RAMAIAH : இந்த விவரங்கள் இப்போது என்னிடமில்லை.

SRI R. KRISHNASAMI NAIDU : தலைவர் அவர்களே, இந்த ரசாயன உரங்களை கூட்டுறவு சங்கங்கள் மூலமாக கொடுக்கவேண்டும் என்பது சர்க்காரினுடைய கொள்கையாக இருந்தாலும், ஜில்லா கூட்டுறவு டெப்யுடி ரெஜிஸ்டிரார், ஜில்லா விவசாய அதிகாரி இவர்கள் அனைவரும் சேர்ந்து, வரக்கூடிய ரசாயன உரங்களை ஏரியா விகிதப் பிரகாரம் ஒவ்வொரு கூட்டுறவு சங்கத்திற்கும், நஞ்சை, புஞ்சை நிலங்களுக்கு ஏற்ப பிரித்து கொடுக்கப்பட வேண்டும். அவ்விதம் இப்போது கொடுக்கப்பட்டு வருவதாகத் தெரியவில்லை. இதைப்பற்றி அரசாங்கம் அவர்களுக்கு ஏதாவது திட்டவட்டமான விதிகள் பிறப்பித்திருக்கிறார்களா? அப்படியானால் அதன் விவரங்கள் என்ன?

THE HON. SRI V. RAMAIAH : This question does not arise out of the main question.